"திசை திறந் தண்டங் கீறிச் சிரித்தது
செங்கட் சீயம்"

★

"எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த
லாலே
இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ"

★

அரன் அதிகன் உலகளந்த அரி அதிகன்
என்றுரைக்கும் அறிவிலார்க்குப்
பரகதி சென்றடைவரிய பரிசே போல்
யாரினும் உயர்ந்த மேலத் தொருவராம் இவர்

★

கற்றவர் கற்றிலா தவரும், உண்ணு நீரினும்
உயிரினு மவனையே உவப்பார்

★

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற வொழுக்கு

★

தாதுகு சோலை தோறும்
சண்பகக் காடு தோறும்
போது அவிழ் பொய்கை தோறும்
புதுமணல் தடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூக
வனந்தொறும், வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும்
உயிர் என உலாயது அன்றே

★

[ தாது உகு சோலை = மகரந்தப் பொடி உதிரும் மலர் நிறைந்த மரங்கள் மலிந்த சோலை; போது அவிழ் பொய்கை = இதழ் விரியும் மலர் தோன்றிய பொய்கை; புதுமணல் தடம் = அவ்வப்பொழுது புதிய மணல் பரப்பப் படும் குளங்களாம்; பூகவனம் = கமுகந் தோட்டம்; உலாயது = சஞ்சரித்தது ]

—★—

தண்டலை மயில்கள் ஆடத் தாமரை விளக்கம் தாங்க
கொண்டல்கள் முழவின் ஏங்க, குவளைகண்
விழித்து நோக்க,
தெண்திரை எழினி காட்ட, தேம்பிழி மகர யாழின்
வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும்
மாதோ

★

[ தண்டலை = சோலை; விளக்கம் = விளக்கு; கொண்டல்கள் = மேகங்கள்; முழவின் = மத்தளம் போல; தெண்திரை = தெளிந்த அலைகள்; எழினி = நாடகத் திரை; தேம்பிழி மகரயாழின் = மதுர கீதம் பொழியும் மகர யாழ் என்னும் வாத்தியம் போல்; மருதம் வீற்றிருக்கும் = நன்செய் நிலம் கொலு வீற்றிருப் பதுபோல் கம்பீரமாய் விளங்கியது ]

—★—

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.

★

கூற்றமும் இல்லை ஓர் குற்றம் இலாமையால்
சீற்றம் இல்லை தம் சிந்தையின் செம்மையால்
ஆற்ற நல்லறம் அல்ல(து) இலாமையால்
ஏற்றம் அல்லது இழிதக(வு) இல்லையே.

★

[ கூற்றம் = எமன் அ அகால மரணம்; சீற்றம் = கோபம் அ தண்டனை; ஆற்ற = செய்வதற்கு; நல்லறம் அல்லது = நல்லறம் அல்லாத தீய வழிகள்; ஏற்றம் = உயர்வு; இழிதகவு = பழிபாவம் ]

—★—

வண்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லை நேர் செறுநர் இன்மையால்
உண்மையில்லை பொய் உரை இலாமையால்
ஒண்மை இல்லை பல் கேள்வி ஓங்கலால்.

★

[ வண்மை = தாராளமான ஈகை; திண்மை = போராற்றல்; செறுநர் = பகைமையால் தீமை செய்வோர்; ஒண்மை = அறிவுப் பிரகாசம்; கேள்வி = சாத்திரம் கேட்பது ]

—★—

ஆழிசூழ் உலக மெல்லாம் பரதனே ஆள நீ போய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற்
கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள்
ஆடி
ஏழிரண் டாண்டின் வாவென் றியம்பினன் அரசன்
என்றாள்

★

ஆவும் அழுத அதன் கன்றழுத அன்றலர்ந்த
பூவும் அழுத புனல் புள்ளழுத கள் ஒழுகும்
காவும் அழுத களிறழுத கால் வயப் போர்
மாவும் அழுதன

★

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்

★

தேருக்கு இருக்கண் செய்தான் தேவரைச் சிறையில்
வைத்தான்
சூரர்க்கு அரக்கன் என்றான் மன்னுயிர் புடை
த்துத் தின்றான்
ஆறையான் அளவும் எல்லா உலகமும் தானே
ஆள்வான்
வாசவன் திருவும் கொண்டான் வாழ்வுடை வாழ்வு
மேற் செல்வான்.

★

அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி ஓங்க வெண்ணெயூர்ச் சடையன்
தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்
தான் மௌலி.

★

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு

★